23rd March 1961]

இருக்கக்கூடிய இடத்திலிருந்து அதை மாற்றியமைக்க ஆலோசனையில்லை. இப்பொழுது இருக்கக்கூடிய பஸ் ஸ்டாண்டில் போதுமான வசதிகள் ஏற்படுத்துவதற்காக பிரத்தியேகமாக ஒரு கமிட்டி போட்டு அவர்கள் சமீபத்தில் அறிக்கை கொடுத்திருக்கிறார்கள். அதைப் பரிசீலனை செய்து பஸ் ஸ்டாண்டை நல்ல முறையில் அமைக்க, என்னென்ன முயற்சிகள் எடுக்கவேண்டுமோ அவை எடுக்கப்படும்.

SRI M. K. SOMASUNDARAM : இப்பொழுதிருக்கக்கூடிய பஸ் ஸ்டாண்டை மாற்றியமைக்காவிட்டாலும் அங்கிருக்கக்கூடிய வியாதியஸ்தர்களை வெளியேற்ற நடவடிக்கை எடுக்கப்படுமா ? பஸ்களில் ஏறி வியாபாரம் செய்யக் கூடிய அளவிற்கு குஷ்டரோகிகள், போன்றவர்களை வெளியேற்றுவதற்கு நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI V. RAMAIAH : கமிட்டி ரிப்போர்ட் பரிசீலனை செய்யப்பட்டு வேண்டிய முடிவுகள் எடுக்கப்படும்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : This has been under the serious consideration of the Hon. the Minister for a long time with the result that people are being put to lot of inconvenience there. Will the Hon. the Minister visit the bus stand? May I know when exactly a decision will be taken?

THE HON. SRI V. RAMAIAH : This has been under our serious consideration. That is why we thought we must have the entire question thoroughly examined and proper decisions taken. The Committee has just submitted its report and it is being examined. After the examination is over, appropriate steps will be taken.

SRI A. A. RASHEED : Sir, is the Hon. Minister aware that nearly 500 buses use the bus-stand now? Will the Government expedite the construction of the bus-stand with all the modern facilities and amenities?

THE HON. SRI V. RAMAIAH : I will look into it.

SRI K. ANBAZHAGAN : அந்த பஸ் நிலையத்திற்கு வேண்டிய இடம் குறைவாக இருக்கிறது என்ற காரணத்தால், மாடிக் கட்டிடம் அமைத்து, கூடுதலான அளவில் மக்கள் தங்கக்கூடிய வசதிகளை செய்து கொடுக்கக்கூடிய முறையில் பெரும் செலவில் கட்டிடத்தை கட்ட அரசாங்கம் திட்டம் வகுக்குமா ? அல்லது அண்டர் கிரௌண்டில் கட்டிடம் அமைக்கின்ற முறையிலாவது திட்டங்களை வகுப்பதற்கு சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI V. RAMAIAH : இதற்கென்று நியமிக்கப்பட்டிருக்கும் கமிட்டி தந்திருக்கின்ற ரிப்போர்ட்டுகளை பரிசீலிக்கும் போது, கனம் அங்கத்தினர் அவர்கள் தெரிவித்த கருத்துக்களையும் அரசாங்கம் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*Panchayat Presidents (visit to Madras)*

* 1031 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்திலுள்ள பஞ்சாயத்து போர்டு தலைவர்களையும், விவசாயத் தலைவர்களையும் சென்னைக்குத் தருவிக்கப்பட்டதன் நோக்கமென்ன ?

(இ) அதனால் சர்க்காருக்கு எவ்வளவு செலவாகியது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) The Presidents of Panchayats were enabled to visit Madras to see the Khadi and Village Industries Exhibition, the Industrial and Commercial Exhibition, and a few important factories and establishments in and around Madras.

[23rd March 1961

Government have not arranged visits of Kisans to Madras specially.

(*b*) The particulars of the expenditure incurred on the visit to Madras of the Presidents of Panchayats are being collected and will be placed on the table of the House.

SRI C. NATARAJAN : தலைவர் அவர்களே, இந்த பஞ்சாயத்து தலைவர்களை எல்லாம் இங்கு வரவழைத்து கூட்டம் போட்டு அதில் ஜாயின்ட் டெவலப்மென்ட் கமிஷனர் அவர்கள் இந்த முன்னேற்றங்களை எல்லாம் பாருங்கள், இவைகளை எல்லாம் செய்த காங்கிரஸ் கட்சிக்கு ஓட்டு போடுங்கள் என்று சொல்லியிருக்கிறார்கள் என்பதை அமைச்சர் அவர்கள் அறிவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது மிகவும் தவறான கருத்து. இவ்விதம் யாராவது பொய்யான கருத்துக்களை சொன்னதை கேட்டுவிட்டுத் தான் கனம் அங்கத்தினர் அவர்கள் இவ்விதம் சொல்லுகிறார்கள் என்று நினைக்கிறேன். அவ்விதம் ஒன்றும் நடக்கவே இல்லை.

SRI T. S. RAMASWAMY : May I know Sir, the rate of travelling allowance and the daily allowance allowed to them? Is it a fact that they are meagre?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது அவர்களே செய்துகொண்ட ஏற்பாடு, நாம் T.A., D.A., ஒன்றும் கொடுக்கவில்லை. பஞ்சாயத்துகளிலிருந்தே இதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொண்டார்கள் என்றுதான் என்னிடம் தகவல் இருக்கிறது.

SRI J. MATHA GOWDER : இவ்விதம் பஞ்சாயத்து தலைவர்கள் இங்கு வருவதால் இந்த இடத்திலுள்ள வேலைகளை எல்லாம் பார்க்க முடிகிறது. இவ்விதம் மேலும் நமது மாகாணத்தில் நடைபெற்றிருக்கும் பல திட்டங்களையும் பார்வையிடுவதற்கு அவர்கள் உத்தரவு கேட்டால் அதைக் கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இங்கு வந்தவர்கள் நெய்வேலியைக் கூடபோய் பார்த்தார்கள் என்று நினைக்கிறேன். அதன் காரணமாகத்தான் திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர் அவர்கள் இதற்கு ஆட்சேபனை சொன்னார்கள் என்று நம்புகிறேன். இந்த மாகாணத்தில் சர்க்காரால் ஒன்றுமே செய்யப்படவில்லை என்று சொல்லுவதற்கு இது எங்கே குறுக்கே நின்று விடுமோ என்ற பயத்தால்தான் இவ்விதம் ஜாயின்ட் டெவலப்மென்ட் கமிஷனர் வாயிலாக சொன்னார்கள் என்று நினைக்கிறேன். மேலும் இம்மாதிரி போகவேண்டும் என்று சர்க்காரின் உதவியை நாடினால் அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்படும்.

*I.A.S. (super time-scale)*

* 1032 Q.—SRI N. K. PALANISAMI : } SRI T. S. RAMASWAMY : } Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether there is any proposal to create a super time-scale for I.A.S. Officers;

(*b*) if so, the details thereof; and

(*c*) the basis on which the candidates would be selected for the same?

THE HON. SRI C.SUBRAMANIAM : (*a*) Yes Sir.

(*b*) The State Government have addressed the Government of India for the creation of four selection grade posts in the grade of Rs. 1,800—50—100—100—100—100—2,250 per mensem to be filled by I.A.S. Officers.